10th September 1960]

SRI P. G. MANICKAM: இதற்கு என்று ஹரிஜன நல இலாகாவில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஸ்பெஷல் டெப்டி கலெக்டர் அவர்கள் ஜில்லாக்களில் சுற்றுப்பிரயாணம் செய்து எந்தெந்தவிடங்களில் புது சங்கங்கள் ஏற்படுத்தலாம், எவ்வளவு ஏக்கரில் ஏற்படுத்தமுடியும் என்ற கணக்கு கொடுத்திருப்பின் அந்த விவரங்களை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN: அந்தக் கணக்குதான் மேஜை மீதுள்ள அறிக்கையில் இருக்கிறது. எங்கெல்லாம் விவசாயத்திற்கு சாதகமாக இடம் இருக்கிறதோ அங்கெல்லாம் கூட்டுறவு பண்ணை கொண்டு வர அரசாங்கம் பரிசிலனை செய்துகொண்டு வருகிறது.

SRI N. MARUDACHALAM: இந்தக் கூட்டுப் பண்ணை சங்கங்களில் யார் யார் அங்கம் வகிப்பார்கள்? எவ்வளவு அங்கத்தினர்கள் இதில் இருப்பார்கள்?

THE HON. SRI P. KAKKAN: கூடுமான வரையில் 50-திலிருந்து 100 ஏக்கர் உள்ள நிலமாகயிருந்தால் பார்த்து கூட்டுப்பண்ணைக்கு சாதகமாகயிருந்தால் அதுபற்றி பரிசீலனை செய்யப்படும்.

*Facilities (Harijans)*

* 613 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) whether the Government have received any representation on 10th June 1960 from the people of Erode taluk about the provision of protected water-supply schemes for Harijans, formation of roads leading towards Harijan colonies and assignment of house-sites for Harijans in Erode taluk, Coimbatore district; and

(*b*) if so, the steps taken thereon?

THE HON. SRI P. KAKKAN: (*a*) No representation from the people of Erode taluk was received. But the hon. Member subsequently wrote to the Government detailing the requirements of Harijans in Erode Taluk.

(*b*) The requests are under the consideration of the Government in consultation with the Collector of Coimbatore and the Director of Harijan Welfare.

*Land holding (Ceilings)*

* 614 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நில உச்ச வரம்பு சம்பந்தமாய் பரிசீலிக்க மத்திய அரசாங்கத் திட்டக் கமிஷன் நியமித்திருக்கும் கமிட்டியின் முடிவு எவ்வகையிலாவது நம் மாநில உச்ச வரம்பு மசோதாவை பாதிக்குமா?

(ஆ) அப்படியானல், அதன் விவரமென்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) & (*b*) Sir, no official communication has been received from the Planning Commission in the matter.